# CARD TRICKS,

*1st Part In Tamil.*

EDITED BY

PROF. K. S. V. NATH, F. I. A. M. Sc.

*Hypnotist and Magician.*




A

PUBLISHED BY

Sriman

Rm. An. ANNAMALI CHETTIAR

Avl,

*Kothamangalam.*

1923

 [*Rs.* 2 0 0.

தில்நார் பஸ்பம்!

# ஸ்ரீஅந்தியானந்த பற்பொடி.

குணத்தில் சிறந்தது! விலையில் குறைந்தது!!

ஏராளமான நற்சாக்ஷிப் பத்திரங்களைப்பெற்றது.

இப்பற்பொடியை உபயோகித்த மாத்திரத்தில், சகல தந்தரோகங்களையும் "சூரியனைக்கண்ட பனிபோல்" உடனே ஓட்டிச் செய்வதோடு பற்களுக்கு முத்துப்போன்ற ஜோதியையும் உண்டுபண்ணி, மனதிற்கின்பமான வாஸனையையும் கொடுக்கும்.

டப்பி 1-க்கு அணா 0—4—0
டஜன் 1-க்கு ரூ. 2—8—0 } தபால் சார்ஜ் வேறு.

எல்லா ஊர்களிலும் ஏஜண்டுகள் தேவை.

மானேஜர்,
"மாயாவி" ஆபீஸ்,
புதுக்கோட்டை, (திருச்சி.)

# CARD TRICKS

## 1st PART IN TAMIL



EDITED
BY

PROF. K. S. V. NATH, F. L. A. M. S.

*Hypnotist and Magician.*

---

**FIRST EDITION.**

---

PRINTED
BY

**Sriman Rm. An. ANNAMALAI CHETTIYAR Avl.,**

*"Shunmuga Vilas" Kothamangalam.*

At the
P. N. P. RAJA PRINTING WORKS,
Trichinopoly.

 1923 [Rs. 2-0-0.

# சீட்டுக்கட்டு தமாஷ்கள்.

## (முதற்பாகம்)

இஃது
மந்திர, தந்திர
வேலைகளில் மிகவும் சமர்த்தரும்,
அனேக ராஜாக்கள், கவர்னர்கள் முதலிய
வித்வசிரோன்மணிகளிடத்தில் யோகியதாபத்திரங்கள்,
அனேக தங்கமெடல்கள் முதலியன பெற்றவரும்,
“நவீன இந்திரஜாலம்” “இந்தியக் கைத்தொழில்
போதினி” முதலிய பல நூல்களின் ஆசிரியரும்,
“மாயாவி” எனும் மந்திர, தந்திர இரகசியங்களை
வெளிப்படுத்தும் அற்புதமான மாதாந்திர
தமிழ் பத்திரிகையின்
பத்திராதிபரும்
ஆகிய

**புரொபஸர், கே. எஸ். வி. நாத், F. I. A. M. Sc.**

அவர்களாலியற்றியது.

கொத்தமங்கலம்
ஸ்ரீமான்

**ரும. அண. அண்ணாமலை செட்டியார்**

அவர்களால்
பிரசுரம் செய்யப்பட்டது.

1923



[விலை ரூ 2-0-0.

# ரிஜிஸ்தர் அறிவிப்பு.

இதனுல் சகலமானவர்களுக்கும் தெரிவிப்பது யாதெனில் :—நமது, "சீட்டுக்கட்டு தமாஷ்கள்" என்னும் இப்புத்தகத்தை இங்லீஷ் இலாகாவிலும், பிரஞ்சு இலாகாவாகிய புதுச்சேரி, காரைக்கால் முதலிய இடங்களிலும், "காப்பிரைட் ரிஜிஸ்தர்" செய்யப்பட்டிருக்கிறபடியால் இப்புத்தகத்தையாவது, இப்புத்தகத்திலுள்ள ஏதாவது ஓர் விஷயத்தை மாத்திரமாவது, இதிலுள்ள விஷயங்களைக் கூட்டிக் குறைத்து வேறு வித்தையாக நினைக்கும் வண்ணம் வாசகங்களைமாற்றி எழுதியாவது அல்லது வேறுபாஷையில் மொழிபெயர்த்தாவது இப்புத்தகத்தை வேரொருவரும் அச்சிடக்கூடாதென்பதை இதன் மூலமாய் தெரிவித்துக்கொள்கிறோம். மீறியாராகிலும் அச்சிடுவாராகில் அதனுல் ஏற்படும் நஷ்டத்தை அவர்களிடமிருந்து வசூல் செய்வதோடு கிரிமினல் செக்ஷன் பிரகாரம் குற்றவாளியுமாவார்கள்.

குறிப்பு :—போலிப் புத்தகம் வெளிவரின், அதைக் கண்டுபிடித்துக் கொடுக்கும் நண்பருக்கு தகுந்த பரிசளிக்கப்படும்.

இங்ஙனம்,

கே. எஸ். வைத்தியநாதன்,

மாயா விநோதன்.

# சீட்டுக்கட்டு தமாஷ்கள்.

## (முதற்பாகம்.)


| நெ. | விஷயம். | பக்கம். |
|---|---|---|
| | ஆக்கியோன் கருத்து | 1 |
| | முக்கியமாய்த் தெரிந்துகொள்ள வேண்டிய சில விதிகள் | 8 |
| 1 | எடுத்த சீட்டை தெரிந்துகொள்தல் | 14 |
| 2 | எடுத்த சீட்டை தெரிந்துகொள்ள சுலபமான வழி | 16 |
| 3 | கண்ணாடியின் உதவியால் சீட்டுகளை தெரிந்துகொள்தல் | 19 |
| 4 | கட்டைவளைத்து சீட்டைத்தெரிந்துகொள்தல் | 20 |
| 5 | எடுத்த சீட்டை திருப்பிப்பார்த்து தெரிந்துகொள்தல் | 22 |
| 6 | அடையாளம்செய்த சீட்டுக்கட்டு | 23 |
| 7 | கொடுக்கும்சீட்டை எடுக்கும்படிசெய்தல் | 25 |
| 8 | ஷை மற்றொருவிதம் | 28 |
| 9 | ஆச்சரியமான சீட்டுக்கட்டு | 29 |
| 10 | கட்டைவளைத்து எடுத்தசீட்டை தெரிந்துகொள்தல் | 31 |
| 11 | மேல் சீட்டைப் பார்த்து நினைத்த சீட்டை தெரிந்துகொள்தல் | 32 |

| | | |
|---|---|---|
| 12 | சீட்டுக்கட்டை துணியால்மூடி எடுத்தசீட்டை தெரிந்துகொள்தல் | 33 |
| 13 | 27 சீட்டில் நினைத்த சீட்டைசொல்தல் | 34 |
| 14 | சீட்டுகளைத் தடவிப்பார்த்து சீட்டின் பெயரை சொல்தல் | 35 |
| 15 | எடுத்தசீட்டை தெரிந்துகொள்ள சுலபமான வழி (மற்றொருவிதம்) | 37 |
| 16 | பிறர் நினைத்த சீட்டை சொல்தல் | 39 |
| 17 | 52 சீட்டுகளையும் பார்க்காமல் சொல்தல் | 43 |
| 18 | பிறர் எடுத்த சீட்டை உடனே சொல்தல் | 47 |
| 19 | சீட்டுக்கட்டில் அஷ்டாவதானம்செய்தல் | 49 |
| 20 | அடிச்சீட்டைப்பார்த்து பிறர் எடுத்த சீட்டை தெரிந்துகொள்தல் | 49 |
| 21 | கலைக்கும் சாமர்த்தியத்தினுல் எடுத்த சீட்டை தெரிந்துகொள்தல் | 50 |
| 22 | பார்த்த சீட்டிற்கு அடையாளம்செய்தல் | 52 |
| 23 | 21 சீட்டுகளில் நினைத்ததை சொல்தல் | 53 |
| 24 | 24 சீட்டுகளில் நினைத்ததை சொல்தல் | 54 |
| 25 | எடுத்த சீட்டை கண்டுபிடித்தல் (மற்றொருவிதம்) | 55 |
| | விளம்பரங்கள் | |

உ

ஸ்ரீராமஜெயம்.

# ஆக்கியோன் கருத்து.



கற்பக விருக்ஷத்திற்கு சமமான சகல செல்வமும் பொருந்திய நமது தாய் நாடாகிய இந்தியாவின்கண் சாஸ்திரம், சாமான், நாகரீகம் நவிலும் நானாவித தொழில்கள் முதலியசகலமும் கிடைக்கக்கூடாதொன்று மில்லையாயினும், 64 கலைக்ஞானத்தில் ஒன்றாய் உயர்ந்து விளங்கும் மந்திர, தந்திர, மஹாஜால வேலைகளைப்பற்றி யாவரும் எளிதில் தெரிந்துகொள்ளும் வண்ணம் நமது சொந்த பாஷையாகிய தமிழில் ஒரு நூலுந் தெளிவாக இதுவரை நம்மவரில் ஒருவரும் வெளியிடவில்லை என்பது ஏனையோரும் நன்கறிந்த விஷயமே,

இக்குறைவை நிவர்த்திக்க வேண்டுமென்ற எண்ணம் எமது மனதிற் குடிகொண்டிருப்பினும், பல நேயர்களின்வேண்டுகோளுக்கு மிணங்கி, ஏதோஎமக்கு

தெரிந்தவரை யாம் செய்துவந்ததும் இப்போது செய்து வருகிறதுமான சிலதந்திர ஜாலங்களை ஒருங்கேசேர்த்து கண்ணுறுவோர் களிப்புறவும் எளிதில் ஏனையோரும் குருவினது உதவியன்னியில் புத்தகத்தைப் படித்தமாத்திரத்தில் ஷை வித்தைகளின் இரகசியங்களை தெரிந்து கொள்ளப் போதுமான தெளிவுடனும் "நவீன இந்திர ஜாலம்" என்ற பெயரமைத்து ஓர் சிறு புத்தகத்தை சிலமாதங்கட்கு முன்னதாக வெளியிட்டிருப்பதுடன், இம்மகாஜால வித்தைகளின் இரகசியங்களையும், "மெஸ்மெரிஸம்" என ஆங்கிலப் பெயரமைந்து வழங்கும் நமது யோக சாஸ்திரத்தின் ஓர் பகுதியான மனோவஸ்ய உண்மைகளின் இரகசியங்களையும், மேல் நாட்டாரைப்போல் இந்தியாவிலும் அபிவிர்த்திசெய்து மேன்மைக்குக் கொண்டுவர வேண்டுமென்ற நோக்கத்துடன், ஒவ்வொரு மாதமும் கொஞ்சம், கொஞ்சமாய் ஷை இரகசியங்களை வெளியிடுவதாய் தீர்மானித்து துன்மதி வரு தைமீ முதல் தேதியிலிருந்து "மாயாவி" என்ற பெயருடன் ஓர் அற்புதமான மாதாந்திர தமிழ்

பத்திரிகையும் ஏற்படுத்தி செவ்வனே நடந்துவருவது யாவருக்கும் தெரிந்த விஷயமே.

மேற்படி நமது "நவீன இந்திர ஜாலம்" என்னும் புத்தகத்தை கண்ணுற்ற அன்பர்களும் நமது "மாயாவி" பத்திரிகையின் சந்தாநேயர்களில் அனேகரும், மந்திர ,தந்திர, மகாஜால வேலைகளுக்கு வேண்டிய சாமான்களோடு "தென் இந்தியா விநோத மேஜிக்கம்பெனி" (The South Indian Excelsior Magic Company) என்ற பெயருடன் நாம் தேசசஞ்சாரம் செய்து வரும் சமயத்தில் எமது "மாயா விநோதக் காக்ஷி" களை நேரில் கண்ணுற்ற அந்தந்த ஊர்களிலுள்ள அனேக நண்பர்களும், நேரிலும் கடித மூலமாயும் சீட்டுக்கட்டில் செய்யும் சாமர்த்திய வேலைகளனைத்தும் ஒன்றாகச் சேர்த்து தனியாய் ஓர் புத்தகம் வெளியிட வேண்டுமென்று பன்முறை வற்புறுத்தி கேட்டுக்கொண்டதற்கிணங்கி எமக்கு தெரிந்த சீட்டுவேலைகள் யாவற்றையும் முதற் பாகம், இரண்டாம் பாகம் என்ற முறையே 25 வேலைகளுடன், பாகம், பாகமாக வெளியிடுவதாய்

தீர்மானித்து சீட்டுக்கட்டில் முதலில் முக்கியமாய் தெரிந்து கொள்ளவேண்டிய சிலவேலைகளும் தற்கால மந்திரவாதிகள் ('Magicians) சீட்டுக்கட்டில் செய்துவரும் ஆச்சரியமான அனேக வேலைகளையும் ஒன்றாகச்சேர்த்து "சீட்டுக்கட்டு தமாஷ்கள்" என்ற பெயருடன் இச்சிறு புத்தகமாகிய முதற் பாகத்தை முதலில் வெளிப்படுத்தியுள்ளோம். இதைப்படிக்கும் நண்பர்களுக்கு இவ்வித சுலபமான வழிகளை ஆங்காங்கு அவசியமான படங்களுடன் இவ்வளவு தெளிவாய் இதுவரை ஒருவரும் வெளியிடவில்லை என்பது நன்றாய் தெரியவரும், அன்றியும் இதைக்கண்ணுறும் ஒவ்வொரு நண்பரும் இப்புத்தகத்தின் பெருமையைப்பற்றி தங்கள், தங்கள் சினேகிதர்களுக்கும் எடுத்துக்கூறி இவை ஏராள விற்பனையாவதற்கு வேண்டிய ஏற்பாடு செய்து ஊக்கமளித்து வருவீராகில் இதற்கடுத்த "இரண்டாம் பாகம்" "மூன்றும் பாகம்" என்ற முறையே சீக்கிரத்தில் வெளியிடுவதற்கு சவுகரியமாயிருக்கு மென்பதை நாம் நமது நண்பர்களுக்கு ஞாபகப்படுத்துவதோடு, இத

னின்னேதேனும் குற்றங் குறைகளிருக்கின் கற்றோர் பெரியோர் பொருத்து குணமதைக் கைக்கொண்டு ஆனந்திப்பீர்களென்று முழுதும் நம்புகின்றோம்.

கே எஸ். வைத்தியநாதன்,
மாயாவிநோதன்.

---



---

# வந்தனப் பத்திரங்கள்.

ஆதியில் மந்திர, தந்திர இரகசியங்களை போதித்த எமது பிரதம குருவாயிருப்பவரும், ஜேஷ்ட சகோதரருமான புரொபஸர் எஸ். சுந்தரமய்யர் அவர்களுக்கு சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து அத்தியந்த வணக்கத்துடன் எமது முழுமனதோடு அன்பார்ந்த வந்தனத்தை செலுத்துகின்றனம்.

தனவைசிய பிரபுக்கள் வசிக்கும் 96 நகரங்களில் ஒன்றாய் உயர்ந்து விளங்கும் கொத்தமங்கலத்தின்கண் வசிப்பவரும், தனவைசிய வகுப்பினரும், தர்மகைங்கரியத்தில் மிகவும் ஈடுபட்டவரும், நம் தாய்நாட்டின் முன்னேற்றத்தை சிரமேற்கொண்டவரும், சுயநலங் கருதாது பொது நலம் கருதி வருபவரும், மந்திர, தந்திர, இரகசியங்களின் உண்மைகளை அறிந்தவரும், இந்நூலை அச்சிடுவதற்கு நமக்கு வேண்டிய பொருளுதவி புரிந்தவரும், எமது ஆத்ம நண்பரும், தேசபக்தருமான

ஸ்ரீமான் ரும. அண. அண்ணாமலை செட்டியார் அவர்களுக்கு எமது அந்தரங்கமனதுடன் அன்பார்ந்த வந்தனத்தை செலுத்துகின்றனம்.

கே. எஸ். வைத்தியநாதன்,

மாயாவிநோதன்.

---

# " நவீன இந்திர ஜாலம் ".

(*By Prof. K. S. V. Nath*)

ஜாலவேடிக்கை (Magic) சம்பந்தமான சகல இரகசியங்களும் மிகவும் எளிய நடையில் எழுதப்பெற்ற அருமையான புத்தகம்.

தபாற்கூலி உள்பட புத்தகம் 1-க்கு ரூ. 3—8—0 தான்.

ஆர்டருக்கு முந்துங்கள்.

மானேஜர், "மாயாவி" ஆபீஸ்,

புதுக்கோட்டை, (திருச்சி.)

---

# சீட்டுக்கட்டு தமாஷ்கள்

## (CARD TRICKS)

செய்யப் பிரியப்படுவோர்

## முக்கியமாய் தெரிந்துகொள்ள வேண்டிய சில விதிகள்.

## (RULES.)



1. முதன் முதலாக சீட்டுக்கட்டை கையி லெடுத்து. வேகமாயும், நன்ருயும் கலைப்பதற்கு பழக வேண்டும்.

2. இன்னவேலை செய்யப் போகிறேனென்பதை முதலில் சபையோரிடம் சொல்லக்கூடாது.

3. சீட்டுக்கட்டில் செய்யும் வித்தைகள் யாவற் றிற்கும் கைப்பழக்கமும், சமயோஜித சாமர்த்திய வார்த்தைகளும் அவசியம் தேவையாதலால் வேறு மற்

திரவாதிகள் தொழில் செய்யுமிடங்களுக்குச்சென்று அவர்கள் செய்வதைப்போல் பார்த்து செய்யவேண்டும்.

4. ஏதாவது ஓர் வேலை செய்யும்பொழுது சபையோர் இன்ன மாதிரி ஷை வேலையின் முடிவுவரப் போகிறது என்று தெரிந்துகொண்டால் நாம் அதை சாதிக்க முடியாது என்பதாக முதலில் பொய்சொல்வதோடு, சபையோரும் நம்மால் முடியாது என்பதாக நம்பும்படி அபிநயம் செய்து அதன் பிறகு ஷை வேலையை சாதித்து காண்பிக்க மிகவும் ஆச்சரியப்படுவார்கள்.

5. ஒரே வேலையை இரண்டு தடவை செய்யக் கூடாது. ஒரே வழியில் இரண்டு வேலைகள் செய்யக் கூடியதாகயிருந்தாலும் அதை செய்யக்கூடாது. ஏனென்றால் சிலபுத்திமான்கள் யூகித்து கண்டுபிடிப்பதற்கிடமாகும்.

6. ஒரு வேலையை தவறுதலாக (Fail) செய்து சபையோர் ஷை வேலையை கண்டுபிடித்துக்கொள்ளும் படியிருந்தால் உடனே "அது அந்த வழி இல்லை"

என்று சமயோசிதம்போல் பேசிக்கொண்டே வேறு வேலையாக செய்துவிடவேண்டும்.

7. வேலைகளை வேகமாய்செய்யவேண்டும். ஆனால் பரபரப்பாகவும் களைக்கும்படியாகவும் செய்யக்கூடாது.

8. ஓர் அட்டவணை தயார் செய்துகொண்டு அதன் பின் ஒன்றின்பின் ஒன்றாய் வேலைகள் செய்ய வேண்டும்.

9. சீட்டுக்கட்டு முதலிய சாமான்களை மறைக்கும்பொழுது மற்றோர் நமது கைகளை கவனிக்கா வண்ணம் சபையோரிடமாவது உதவிப் பையனிடமாவது பேசிக்கொண்டிருக்கவேண்டும்.

10. கைப்பழக்கம் செய்துகொள்ளவேண்டிய வேலைகளை, தனிமையான இடத்தில் தனது அந்தரங்க மனுஷியர்களை வைத்துக்கொண்டு, அவர்களிடம் செய்து காண்பித்து நல்ல பழக்கமான பிறகு சபையில் செய்ய முன்வரவேண்டும்,

11. சீட்டுகட்டு தமாஷ்கள் செய்வதற்கு புதுக் கட்டாக இருப்பது நலம்.

12. ஜாலவித்தை சம்மந்தமாயுள்ள இரகசியங்கள் யாவும் தெரிந்து கொண்டிருந்தாலும் தான் என்ற அகம்பாவத்தை (கர்வம்) மேற் கொள்ளக்கூடாது.

13. சபையில்நின்று தொழில் செய்யும்பொழுது மாந்திரீக தொழில்கள் யாவும் தெரிந்தவரென்றும், கெட்டிக்காரன் என்றும் சபையோர் நினைக்கும் வண்ணம் சாமர்த்தியமாய் பேசவேண்டும்.

14. இவ்வித ஜாலவித்தைகளின் இரகசியங்களை மட்டும் தெரிந்து, நாம் தொழிலாக வைத்துக்கொண்டு சபையில்செய்ய முன்வராமலிருந்தாலும், நாம்தான் அத்தொழில்களை செய்துவரவில்லையே என்பதாக நினைத்து வேறுமந்திரவாதிகள் தொழில்செய்யும்பொழுது ஷை வேடிக்கைகளின் இரகசியங்களை சபையோரிடம் சொல்லி அவரை அவமானப்படுத்தக்கூடிய எண்ணம் நம் மனதில் உதிக்க விடக்கூடாது.

15. வேறு மந்திரவாதிகள் தொழில் செய்து வரும்பொழுது நம்மால் இயன்ற உதவியைச் செய்து அவருக்கு நல்ல பெயர் உண்டாகும்படி செய்யவேண்டும்.

16. தொழிலாளிகள் யாவரையும் சிநேகிதம் செய்து கொள்ளவேண்டும், விரோதித்துக் கொள்ளக் கூடாது.

17. இவ்வித்தைகள் செய்பவர் நாம்தான், எல்லோரைக் காட்டிலும் வல்லவன் என்று திண்ணமாய் நினைத்துக் கொள்ளவேண்டும். அப்படி நினைக்காமல் போனால் அவன் செய்யும் காரியம் ஒன்றும் பூர்த்தியாகாது.

18. எவ்விஷயத்திலும் தொழில் செய்யும் மந்திரவாதியைப் பார்த்தால் "படாடோபேன பயங்கரஹ:" என்னும் வாக்கியம்போல் எதிரிகளை மயங்கச்செய்யும் வண்ணம் நடை, உடை, பாவனை, பேச்சு சகலமுமிருக்கவேண்டியது அவசியம்.

19. நம்முடைய வித்தைகளை பார்த்தவர்களே அடிக்கடி பார்க்க வேண்டுமென்று வற்புறுத்திக் கேட்டால், பார்க்காத புதுவேலைகளாக அவர்களிடம் செய்து காண்பிக்க வேண்டும். அடிக்கடி விளையாட்டாகவும் செய்யக்கூடாது. அலக்ஷியம் ஏற்பட்டுவிடும். கௌரவத்தை பாராட்டி விசேஷகாலங்களில் வேடிக்கையாக செய்யவேண்டும்.

20. ஒருவரிடமிருக்கும் தொழில், அல்லது ஏதாவது ஓர் உண்மை நாம் கிரஹித்துக் கொள்ளவேண்டுமானல் நமக்கு தெரிந்திருப்பினும் தெரிந்ததாக காண்பித்துக்கொள்ளாமல் கேழ்க்கவேண்டும்.

---



---

ஸ்ரீராமஜெயம்.

# சீட்டுக்கட்டு தமாஷ்கள்.



## முதற்பாகம்.



### 1. எடுத்த சீட்டை தெரிந்து கொள்தல்.

சீட்டுக்கட்டிலுள்ள சிகப்பு சீட்டுகள் முழுமையும் ஒரு கட்டாகவும், கருப்புச்சீட்டுகள் முழுமையும் ஒரு கட்டாகவும் தனித்தனியாக இரண்டு கட்டுகளாக பிரித்து ஒரு கட்டை சட்டை ஜேபில் வைத்துக்கொண்டு மற்றொரு கட்டை சபையோர்முன் கொண்டுவந்து நன்றாய்க்கலத்து சபையோரிலொருவரை ஓர் சீட்டெடுத்து பார்த்துக்கொள்ளும்படி செய்து, அவர் சீட்டைப்பார்த்துக்கொண்டிருக்கும் சமயம் சமயோஜிதம்போல் சிற்சில வார்த்தைகள் பேசிக்கொண்டே சபையோர் தெரி

ந்துகொள்ளா வண்ணம் தந்திரமாய் கையிலிருக்கும் சீட்டுக்கட்டை ஜேப்பில் வைத்துவிட்டு ஜேப்பிலிருக்கும் சீட்டுக்கட்டை கையிலெடுத்துக்கொண்டு "தாங்கள் சீட்டை நன்றாய் பார்த்துக்கொண்டீர்களா? ஞாபகமிருக்கிறதா?" என்பதாகக்கேட்டு தாங்கள் பார்த்துவைத்துக்கொண்டிருக்கும் சீட்டை சீட்டுக்கட்டில் உங்கள் இஷ்டப்பிரகாரம் எவ்விடத்திலாவது வைத்து நன்றாய் கலைத்துக்கொடுங்கள் என்று சீட்டுக்கட்டை கையில் கொடுத்து சீட்டைவைத்து சீட்டுகள் கீழே விழாமல் கலைக்கச் சொல்லவும். கலைத்து கொடுத்தபிறகு கட்டை கையில் பிடித்துக்கொண்டு சீட்டுகளின் ஓரங்களை பரபரவென்று வேகமாய்த்தள்ளி பார்க்குங்கால் அவர் எடுத்த சீட்டு மாத்திரம் வேறு நிறமுள்ளதாகையால் அது உடனே பிரகாசமாய் கண்ணில் தென்படும் பிறகு அதை வெளியிலெடுத்து "இந்த சீட்டுதானா நீங்கள் எடுத்த சீட்டு" என்பதாக காண்பிவித்து ஷை சீட்டை கையில்கொடுக்க சபையோர்கள் யாவரும் ஆச்சரியப்படுவார்கள்.

**குறிப்பு:**—இவ்வேலை செய்யும்போது சீட்டுகள் கீழே விழாவண்ணம் கலைப்பதுடன் சபையோர் சீட்டுக்

கட்டை பிரித்துப் பார்க்காமலும், சட்டை ஜேப்பி லிருந்து சீட்டுக்கட்டை எடுத்து மாற்றும் சமயம் பிறர் தெரிந்துகொள்ளாமலும் சாமார்த்தியம் செய்துகொள்ள வேண்டிய அவசியம்.

---

## 2. எடுத்த சீட்டை தெரிந்து கொள்ள சுலபமான வழி.

எடுத்த சீட்டை சிரமமன்னியில் தெரிந்து சகல ஜனங்களுக்கும் ஆச்சரியத்தை உண்டுபண்ணுவதற்கு இது ஓர் சுலபமான வழி. எப்படியெனின், சீட்டுக் கட்டிலுள்ள 52 சீட்டுகளில் ஏதாவது 5 அல்லது 6 சீட்டுகளை எடுத்து வரிசைக் கிரமப்படி அடுக்கி ஷை சீட்டுகளின் பெயரை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு, சீட்டுகள் வைக்கும் (Cover) கூட்டில் ஷை 5 அல்லது 6 சீட்டுகளையும் போட்டுவைக்க வேண்டும். பிறகு சீட்டுக்கட்டை சபையோரிடம் கொடுத்து அவர்களிஷ் டப்படி நன்ருய் கலக்கச் சொல்லிவிட்டு ஏற்கனவே

தயாராக வைத்திருக்கும் (Cover) சீட்டுகள் வைக்கும் கவர் கூட்டை எடுத்து அதற்குள் வைத்திருக்கும் சீட்டுகள் கீழே விழாவண்ணம் ஒரு பக்கத்தில் சேர்த்து பிடித்துக்கொண்டு மந்திரக் கோலால் தட்டிக்காண்பித்து "இதில் ஒன்றுமில்லை சாதாரணமாய் சீட்டுகள் வைக்கும் (Cover) கூடு" என்பதாக சமயோஜிதம் போல் சில வார்த்தைகள் பேசிவிட்டு சபையோர் கையிலிருக்கும் கட்டை மறுபடியும் நன்ருய்கலைக்கச்சொல்லி அப்படியேஷை சீட்டுக்கட்டைவாங்கிஷை(Cover) கூட்டில் வைத்து மேஜையின்மேல் வைத்துவிட்டு "தாங்கள் பார்த்த சீட்டு ஞாபகமிருக்கிறதா?" என சபையோரை பார்த்துக்கேட்க சபையோர்கள் நாங்கள் ஒருவரும் சீட்டு பார்க்கவில்லையே; சீட்டுக்கட்டை கலைத்து கொடுக்கச் சொல்லி கூட்டில் வைத்து மேஜையின்மேல் வைத்துவிட்டீர்களே! என சொல்லுவார்கள் உடனே ஓ! மறந்துபோய்விட்டேன்? "நீங்கள் கலைத்துக் கொடுத்தபிறகு சீட்டுக்கட்டை பிரித்து பார்த்தேனு? என்பதாக கேட்க, இல்லை என்பார்கள். உடனே அப்படியானல் நீங்கள் எல்லோரும் ஒவ்வொரு சீட்டு எடுத்

துப்பார்த்துக்கொள்ளுங்கள்! என உரைத்துக்கொண்டே ஷை கட்டிலிருந்து மேல் சிட்டை எடுத்துப் பார்த்துக் கொள்ள சொல்வதுடன், வரிசைக்கிரமப்படி எத்தனை சீட்டுகள் ஏற்கனவே தெரிந்து வைத்திருக்கிறோமோ அவ்வளவு பேர்வழிகளிடம் கட்டின் மேலிருந்து ஒவ்வொரு சீட்டாக எடுத்துப் பார்த்துக்கொள்ளச் சொல்லவும். 5, 6 பேர்வழிகளும் சீட்டுகள் பார்த்த பிற்பாடு சீட்டுக்கட்டை கூட்டிலிருந்து வெளியிலெடுத்து ஒவ்வொருவரும் சீட்டைப் பார்த்து ஞாபகத்தில் வைத்துக்கொண்டு கட்டில்வைத்துக் கலைத்து கொடுங்கள் என்பதாகச் சொல்லி கட்டை சபையோரிடம்கொடுத்து விடவும்.

அவர்கள் எடுத்த சீட்டை கட்டில்வைத்துக் கலைத்துக்கொடுத்த பிறகு "மெஸ் மெரிஸம்" என் வழங்கும் மனோசக்தியால் ஷை சீட்டுகளை சொல்வதற்கு யோசனை செய்வதுபோல் அபிநயம்செய்து ஏற்கனவே ஞாபகத்தில் வைத்திருக்கும் ஷை சீட்டுகளை வரிசைக் கிரமப்படி ஒவ்வொருவருக்கும் சீட்டுகளின் பெயரை சொல்.

விக்கொண்டுவரவும். இவ்வேலையை "மெஸ் மெரிஸம்" அல்லது மனோசக்தியால் சீட்டுகளின் பெயரை சொல்லியதாகவே நினைத்து சபையோர்களனைவரும் ஆச்சரியப்படுவார்கள்.

---

## 3. கண்ணாடியின் உதவியால் சீட்டுகளை தெரிந்து கொள்ளுதல்.

அடியில் கூறப்போகும் உபாயத்தால் சீட்டுக்கட்டிலுள்ள சீட்டுகள்யாவும் பார்க்காமல் சொல்லி சபையோர்களை பிரமிக்கச் செய்யலாம். அதாவது ஓர் முகம் பார்க்கும் கண்ணாடி (Glass) அல்லது கண்ணாடி பதித்த அலமாரி இவைகளுக்கு எதிரில் நின்று, சீட்டுக் கட்டை நன்றாய்க் கலைத்து சபையோர் பக்கம் திருப்பி காண்பிவிக்க, எதிரில் இருக்கும் கண்ணாடியில் நம் கையிலிருக்கும் சீட்டுகள் பிரதிபிம்பிக்கப்பட்டு நமது பார்வைக்கு ஷை சீட்டுகள் யாவும் நன்றாய் தெரியுமாதலால்

வரிசைக் கிரமப்படி 52 சீட்டுகளையும் சொல்லிக் கொண்டுவர எனையோரும் ஆச்சரியப்படுவார்கள்.

குறிப்பு:—கண்ணாடியைப் பார்த்துச் சொல்வதாக பிறர் தெரிந்துகொள்ளா வண்ணம், "மெஸ்மெரிஸம், மனோசக்தி" யால் சொல்வதற்கு யோஜிப்பதுபோல் அபிநயம் செய்து சீட்டுகளை சொல்லிவரவேண்டியது முக்கியம்.

---

## 4. கட்டை வளைத்து சீட்டை தெரிந்து கொள்ளுதல்.

சீட்டுக்கட்டை நன்றாக கலைத்து சபையோர் பக்கம் திருப்பி வலது கரத்தில் பிடித்துக்கொண்டு சீட்டுக் கட்டு கொஞ்சம் வளையும் வண்ணம் விரலால் அழுத்தி ஒவ்வொரு சீட்டாக கீழேவிழும்படி போடும் சமயம் சபையோரிலொருவனை கட்டில் தங்கியிருக்கும் சீட்டு களில் ஏதாவதொன்று நினைத்துக்கொள்ளச் சொல்ல

வேண்டும் பிறகு சபையோர் நினைத்துக்கொண்டேன் என்று சொன்னதும் சீட்டுக் கட்டின் அடிபாகத்தின் முனையை கடைக்கண்ணுல் தந்திரமாய் கவனிக்க சீட்டு க்கட்டைக் கொஞ்சம் வளைத்துப்பிடித்துக் கொண்டிரு ப்பதால் சீட்டுகளின் ஓரங்களில் போடப்பட்டிருக்கும் ஜாதியும் நெம்பரும் தெரியவரும். சீட்டின் ஜாதியையும் நெம்பரையும் நாம் பார்த்துக் கொள்வது சபையோர் தெரிந்து கொள்ளாவண்ணம் தந்திரமாயும் சாமர்த்திய மாயும் பார்த்துக்கொண்டு அப்படியே சபையோரிடம் கட்டைக்கொடுத்து அவர்களிஷ்டப்பிரகாரம் கலேத்துக் கொடுக்கச்சொல்லி வாங்கிக்கொண்டு மந்திர சக்தியால் சொல்வதுபோல் பிறர் நினைக்கும் வண்ணம் அபிநயம் செய்து சீட்டின் பெயரைச்சொல்ல எவேயோரும் ஆச் சரியப்படுவார்கள். இவ்வேலையில் சபையோருக்கு எவ் வித சந்தேகமும் எற்படாதாகையால் மந்திர சக்தியால் சொன்னதாகவே நினைத்து ஆச்சரியப்படுவார்களென்ப தில் ஐயமில்லை ஆனல் மிகவும் சாமர்த்தியமாய் செய்ய வேண்டும்.

---

## 5. எடுத்த சீட்டை திருப்பிப்பார்த்து தெரிந்து கொள்ளுதல்.

இவ்வேலையானது சகல ஜனங்களுக்கும் ஆச்சரிய த்தை உண்டுபண்ணுவதுடன் யாதொரு சிரமமன்னியி லும் வித்தை செய்வோர் பிறர் எடுத்த சீட்டை சுலப மாய்த்தெரிந்து கொள்ளக்கூடும். எவ்விதமெனில் சீட்டுக் கட்டை நன்றாய்க்கலைத்து சபையோரிலொருவரை அழை த்து ஏதாவது ஒரு சீட்டை எடுத்துப் பார்த்துக்கொள் ளும்படி செய்து பிறகு சீட்டுகட்டின்மேல் ஷை சீட்டை வைக்கச்சொல்லி தனது பின்பக்கம் ஷை சீட்டுக்கட்டை கொண்டுபோய் கலைப்பது போல் நடித்துக்கொண்டே சபையோர் பார்த்து கட்டின்மேல் வைத்திருக்கும் சீட் டை திருப்பி வைத்துக்கொண்டு முன்பக்கம் சீட்டுக்கட் டைகொண்டு வந்து ஷை கட்டின் அடிச்சீட்டை காண் பித்து "இதுதானா நீங்கள் பார்த்த சீட்டு" என்று கேட்க இல்லையென்று சொல்வார்கள் அப்பொழுது அவர் பார்த்த சீட்டை ஷை கட்டின் மேல்திருப்பிவைத் திருக்கிறபடியால் அச்சீட்டு இன்னதென நமக்கு நன்கு

புலப்படும். பார்த்துக்கொண்டு தாங்கள் பார்த்த சீட்டு இல்லை என்று சொல்கிறபடியால் மறுபடியும் நன்றாகக் கலைக்கிறேன் என்று சொல்லிக்கொண்டே பின்பக்கம் கொண்டுபோய் திருப்பிவைத்திருக்கும் சீட்டை சரியாக வைத்துவிட்டு நன்றாக கலைத்து நீங்களும் இன்னும் கலையுங்களென்று சொல்லிசபையோர் கையில் கொடுத்து அவர்கள் கலைத்துக்கொடுத்த பிற்பாடு நாமும் அதைக் கலைத்து அவர்கள் பார்த்த சீட்டை எடுத்துக் கொடுக்க சகலரும் ஆச்சரியப்படுவார்கள்.

---

## 6. அடையாளம் செய்த சீட்டுக்கட்டு.

சீட்டுக்கட்டிலுள்ள 52 சீட்டுகளுக்கும் ஒவ்வொரு சீட்டின் பின்பக்கத்தில் ஒரே மாதிரியாய் நகத்தினால் கோடுகிழித்தாவது சீட்டுகளின் பின் பக்கத்திலிருக்கும் கொடிக்கருக்குகளுடன் சேர்ந்தாற்போல் கருப்பு இங்கி (Black Ink) யினால் புள்ளிவைத்தாவது பிறர் அறிந்து கொள்ளாவண்ணம் சீட்டின் ஒரு பக்கத்தில் ஏதாவது

ஓர் அடையாளம் செய்து வைத்திருக்க வேண்டும். இவ்வித ஏற்பாடமைந்த சீட்டுக்கட்டை சபைதனில் கொண்டுவந்து நன்றாய்க் கலைத்து சபையோரில் ஒருவரை அழைத்து அவர்களிஷ்டமான இடத்தில் ஓர் சீட்டைப் பார்த்துக் கொள்ளும்படிச் செய்து ஷை சீட்டை நன்றாய் பார்த்துக்கொள்ளுங்கள் ஞாபகமிருக்கட்டும், எனசிற் சிலவார்த்தைகள் சமயோஜிதம்போல் பேசிக்கொண்டே தன் கரத்திலிருக்கும் சீட்டுக்கட்டை முதலில் பிடித்துக்கொண்டிருந்த பக்கத்தை பிறர் அறியாவண்ணம் திருப்பிக்கொண்டு அதில் அவருக்கிஷ்டமான இடத்தில்ஷை சீட்டை சொருகிவிடும்படிச் செய்து பிறகு நன்றாய் கலைத்து தாம் அடையாளம் செய்ததை சீட்டின் பின் பக்கத்தில் உற்று நோக்குங்கால் அவர் எடுத்த சீட்டு மாத்திரம் அடையாளம் செய்தது தலைப்புமாறியிருக்குமாதலால் ஷை சீட்டை எடுத்துக்கொடுக்க சகலரும் ஆச்சரியப்படுவார்கள். சீட்டுக்கட்டை கலைக்கும் பொழுது சீட்டுகள் கீழே விழாமல் கலைக்கவேண்டியது, சீட்டு எடுத்தவர் சீட்டை திருப்பிவிட்டால் நாமும் கட்டை திருப்பிக்கொள்ளவேண்டியதவசியம்.

## 7. கொடுக்கும் சீட்டை எடுக்கும்படிசெய்தல்.

நாம் இதுவரை ஒருவர் எடுத்த சீட்டை தெரிந்து கொள்வதற்கு பல அரிய வழிகளைக் கூறிக்கொண்டு வந்திருப்பினும் அடியில் கூறப்போகும்வழியானது இவ்வித மான வித்தைகளைக் கற்று தேர்ச்சியடைந்து பெரிய பண்டிதராக (Professor) தோன்றி நற்கியாதிபெற்று மேன்மையடைய ஆசைப்படும் நண்பர்கள் தெரிந்து கொண்டு சாதகம்செய்யவேண்டிய முக்கியமான தொழி லாகும். அடியில் கூறியபடி பழக்கம் செய்து தேர்ச்சி யடைந்த பிறகு சபையோரிடம் ஷை வேலையைசெய்ய முன்வரவேண்டும்.



சீட்டுக்கட்டை நன்றாய்க்கலத்து அடிச்சீட்டைத் தந்திரமாய்ப் பார்த்துக்கொண்டு அடியில் பார்த்த சீட்டு அடியிலேயே இருக்கும் வண்ணம் சீட்டுக்கட்டை மறுபடியும் கலைத்து அடியில் பார்த்த சீட்டு நடுவில் அடையாளம் தெரியும் வண்ணம் வெட்டி வைத்துக் கொண்டு சபையோரிலொருவரை “ஏதாவது ஓர் சீட் டெடுத்துக்கொள்ளுங்கள், உங்கள் இஷ்டப்பிரகாரம்

எங்கே எடுக்க வேண்டுமானுலும் எடுத்துக்கொள்ளுங் கள்" என்பதாக சமயோஜிதம்போல் பேசிக் கொண்டே பரபரவென்று ஒன்றின்பின் ஒன்ருய் விசிறி போல் பிரித்து வேகமாய்த் தள்ளிக்கொண்டுவரும் சம யம் சபையோரில் ஒருவர் சீட்டெடுக்க சீட்டுக் கட்டில் கையைவைத்ததும், தந்திரமாய் அடையாளம் பார்த்து வைத்திருக்கும் சீட்டையே அவர் எடுக்கும்படி செய்ய வேண்டும். அவர் கையில் அச்சீட்டையே சாமர்த்தியம் செய்து கொடுக்கவேண்டும். இவ்விதமான இரகசி யத்தை சபையோர் தெரிந்துகொள்ளாவண்ணம் சாமர்த் தியமாய் செய்ய வேண்டும். இவ்வித சாமர்த்தியத்தி ஞல் நாம் அவர் கையில் கொடுத்த சீட்டை அவர் பார்த்து சீட்டுக்கட்டில் வைத்துக் கலைத்துக் கொடுத்த பிற்பாடு "மேஸ் மேரிஸம்" அல்லது மனேசக்தியால் ஷை சீட்டை தெரிந்து சொல்வதுபோல் அபிநயம் செய்து ஷை சீட்டை சொல்ல ஏனைய ஜனங்களும் ஆச் சரியப்படுவார்கள்.

இவ்வேலை செய்வதற்கு மிகுந்த பழக்கம்வேண்டும். சமயோஜிதம்போல் பேசிக்கொண்டே நாம் குறிப்பிட்

டிருக்கும் சீட்டையே அவர் எடுக்கும்படி செய்யவேண்டும். இவ்வழியைக்கொண்டு சீட்டு கண்டு பிடித்த பிற்பாடு அவரவர்கள் புத்தியுக்திக்குத் தகுந்த வண்ணம் பற்பல வேலைகளாக சமயோஜிதம்போல் செய்து காண்பிவித்து சகலரையும் பிரமிக்கச்செய்யலாம்.

குறிப்பு:—நாம் குறிப்பிட்ட சீட்டை அவர் எடுக்காமல் வேறு சீட்டை அவர் எடுத்துவிடுவாராகில் ஏற்கனவே சொல்லிக்கொண்டுவந்த உபாயங்களில் ஏதாவதொன்றின்படி கண்டுபிடித்து எடுத்துக்கொடுக்க வேண்டும். இவ்விதமான வித்தைகளை செய்யப் பிரியப்படுகிறவர்கள் முக்கியமாய் தெரிந்துகொள்ளவேண்டியதுயாதெனின்; தொழில் செய்துவரும் சமயம் ஏதாவதொன்றில் தவறிப்போய்விட்டால் வித்தை செய்பவர் தன் சாமர்த்திய வார்த்தைகளால் தவறுதல் அடைந்ததை சபையோர் தெரிந்துகொள்ளாவண்ணம் மறைத்துக் கொள்வதோடு அதையே வேறுவேலையாகச் செய்து காண்பிக்கவேண்டும். இன்ன வேலை செய்யப் போகிறோம் என்பதை சபையோர் தெரிந்துகொள்ளாமலிருக்க வேண்டியது அவசியம்.

## 8. நாம் கொடுக்கும் சீட்டை எடுக்கும்படி செய்தல்.

(மற்றோர் விதம்.)

மேற்கண்ட 7-வது வேலையில் கூறிய பிரகாரம் சீட்டுக்கட்டின் அடியில் 4, 5 சீட்டை தந்திரமாய்ப் பார்த்துக்கொண்டு கட்டை கலைக்கும்பொழுது சாமர்த்தியமாய் ஷை 4, 5 சீட்டுகளையும் நடுவில்கொண்டுவந்து வைத்து முன் வேலையில் கூறியதுபோல் சபையோரிலொருவரை ஓர் சீட்டெடுத்துப் பார்த்துக்கொள்ளும்படிச் சொல்லி கட்டை பரபரவென்று வேகமாய்த் தள்ளிக்கொண்டுவர நாம்குறிப்பிட்டு வைத்திருக்கும் 4 அல்லது 5 சீட்டுகளில் ஏதாவதொன்றை அவரை எடுக்கும்படிசெய்வதுசுலபமாகும். அடியில் ஒரு சீட்டை பார்த்துக்கொள்வதைக் காட்டிலும் 4, 5 சீட்டுகள் பார்த்துக்கொள்வதுமெத்த நலம்.

---

'நவீன இந்தரஜாலம்' :—மந்திர தந்திர (Magic) இரகசியங்கள் யாவும் அடங்கிய அருமையான புத்தகம்.

## 9. ஆச்சரியமான சீட்டுக்கட்டு.

## (Wonderful Cutting Card Pack.)

நாம் சபையினின்றும் வேடிக்கை செய்யப் புகு முன் தனிமையாய் ஓர் சீட்டுக்கட்டு தயார்செய்து வைத்திருக்கவேண்டும். அது எவ்விதமெனின் 1808ம் நெம்பருள்ள சீட்டுக்கட்டு ஒன்றுவாங்கி ஷை கட்டை கையினில் அல்லது பிடித்துராவியில் வைத்து, கெட்டியாய் மேல் இரண்டு பக்கங்களையும் மட்டமாக வைத்துப் பிடித்துக்கொண்டு நீட்டுசெத்தில் பாதிக்குமேல் அகல வசத்தில் ஷை சீட்டுகளெல்லாம் ஒன்றுபோல் இரண்டு நூலிழைகனம் குறையும்படி கடல் நுரையால் தேய்த்து அதை சாதாரணமாய்ப் பார்ப்பவர்களுக்கு வித்தியாசம் தெரியாவண்ணம் தயார்செய்து வைத்துக்கொள்ளவேண்டும். அச்சீட்டுக் கட்டை சபைதனில் எடுத்துவந்து கலைத்து யாரேனும் ஒருவரை அழைத்து அவர்களுக்கிஷ்டமான சீட்டை எடுத்துக்கொள்ளும்படிச் செய்து அதை நன்றாய்ப்பார்த்துக்கொள்ளுங்கள் என்று உரைத்துக்கொண்டே நமது கையிலிருக்கும் சீட்டுக்கட்டை

முதலில் பிடித்துக்கொண்டிருந்த பக்கத்தைப் பிற ரறியாவண்ணம் திருப்பிக்கொண்டு அதில் அவருக்கிஷ்ட மான இடத்தில் சொருகிவிடும்படிசெய்து மறுபடி சபைக்கு முன் நன்றாய்க் கலக்கவேண்டியது. அச் சமயம் முக்கியமாய் கவனிக்க வேண்டியது யாதெனில் கட்டிலிருந்து சீட்டுகள் தவறி கீழே விழாவண்ணம் கலக்கவேண்டியது மெத்த அவசியம். பிறகு கலக் கும்பொழுதே சீட்டுக்கட்டின் மேல்பாகம் கீழ்பாகத் தில் தடவுங்கால் ஒரு சீட்டுமாத்திரம் கொஞ்சம் அகல மாய் நெரடும். அதை ஜாக்கிரதையாகவும், சாதுர்ய மாகவும் சபையோருக்குத் தெரியாவண்ணமிழுத்து சரியரகத்திருப்பி அடியில்வைத்துக் காட்டவேண்டியது. அதுவேதான் அவர் எடுத்துப் பார்த்த சீட்டு. ஒரு சீட்டு மாத்திரம் கைக்கு நெரடும்படி நீட்டியிருக்க வேண்டிய காரண மென்னவெனில், ஒரு பாதியை நாம் ஏற்கனவே கடல் நுரையால் தேய்த்து அகலத்தை குறைத்திருப்பதாலும், மற்றொருபாதி சரியாகயிருப்ப தாலும், எதிரி அதினின்றும் ஓர் சீட்டை எடுத்தவுடன் நாம் கையில் பிடித்திருந்த பக்கத்தை வெளியிலும்,

வெளியிலிருந்த பக்கத்தை கையிலும் பிடித்துக் கொண்டு எடுத்த சீட்டை சொருகும்படி செய்வதாலும் எடுத்தவர் எப்படி எடுத்தாரோ அப்படியே பார்த்து விட்டு சொருகுவதாலும் தலைப்புமாறியிருக்கும்பக்கம் நன்றாகக் கைக்குத் தெரியும்படி ஏற்படுகிறதற்கு ஏதுவாகயிருக்கிறது. இந்த உபாயத்தால் ஒருவர் எடுத்த சீட்டை கண்டுபிடிக்கலாம். எதிரி எடுத்த சீட்டை சொருகும்பொழுது தலைப்பு மாறுவண்ணம் பார்த்து கொள்ளவேண்டியது. மாற்றிவிட்டால் அதற்குத் தகுந்தவாறு நாமும் மறுபக்கம் மாற்றவேண்டியது முக்கியம்.

---

## 10. கட்டை வளைத்து எடுத்த சீட்டை தெரிந்துகொள்தல்.

ஒன்பதாவது வேலைக்கு சொல்லியிருக்கும் சீட்டுக் கட்டைத்தவிர வேறொரு சாதாரணகட்டை எடுத்து சபையில் நின்று விலைத்து சபையோரிலொருவரை

அழைத்து ஓர் சீட்டெடுத்து பார்க்கும்படிச்செய்து அவர் பார்க்கும்பொழுது "நன்றாய்ப் பார்த்துக்கொள்ளுங்கள், ஞாபகமிருக்கட்டும், மறந்துவிடாதீர்கள்" என்பதாக சில வார்த்தைகளை சமயோஜிதம்போல் பேசிக்கொண்டே கொஞ்சம் கட்டைவளைத்துக்கொண்டு அதிலிஷ்டமானயிடத்தில் சொருகும்படிசொல்லி நன்றாய்க் கலைத்து வருங்கால் எதிரி எடுத்த சீட்டு வளையாமலும் நமது கரத்திலிருந்த சீட்டுகள் வளைந்துமிருக்குமாகையால் வித்தியாசம் நன்கு புலப்படும். இந்த உபாயத்தால் வளையாமலிருக்கும் சீட்டு இன்னதென கலைக்கும்பொழுதே பார்த்துக்கொண்டு சொல்லவேண்டியது. இவ்வேலைக்கு புது சீட்டுக்கட்டாகயிருக்க வேண்டியது அவசியம்.

---

## 11. மேல் சீட்டைப் பார்த்து நினைத்த சீட்டை தெரிந்து கொள்தல்.

சபையில் நின்று சீட்டுக்கட்டை கலைக்கும் பொழுது தந்திரமாய் மேல்சீட்டு இன்னதென பார்த்

துக்கொண்டு ஒவ்வொரு சீட்டாக கீழேவிழும்படி போடுங்கால் கட்டில் தங்கியிருக்கும் சீட்டுகளில் சபையோரை ஏதாவது ஒன்று நினைத்துக்கொள்ளும்படி சொல்லிசபையோர் நினைத்துக்கொண்டபிறகு மீதமிருக்கும் சீட்டை அப்படியே கலைத்துக்கொண்டு விழுந்து கிடக்கும் சீட்டுகளையும் நொருக்கிச்சேர்த்து கலைந்துப் பிரித்துப் பார்க்கும்பொழுது நாம் முதலில்பார்த்த மேல்சீட்டுக்கு மேலிருக்கும் சீட்டு எதுவோ அது தான் அவர்கள் பார்த்த சீட்டெனத்தெரிந்து எடுத்துக் கொடுக்கவேண்டியது. இம்முறை செய்யுங்கால் குடு வுருவிகலைப்பதுகூடாது.

---

## 12. சீட்டுக்கட்டை துணியால் மூடி எடுத்த சீட்டை தெரிந்துகொள்தல்.

சீட்டுக்கட்டை நன்றாய்க்கலைத்து சபையோரி லொருவரை அழைத்து ஓர் சீட்டெடுத்துப் பார்த்துக் கொள்ளும்படிசெய்து பாக்கி சீட்டுகளை கீழேவைத்து

மேலே ஓர் துணியைப்போட்டு மூடுங்கால் கீழே வைத்திருக்கும் சீட்டுக்கட்டை கவிழ்ந்திருக்காவண்ணம் மேல்பக்கமாக திருப்பிவைத்துவிட்டு அவர் பார்த்த சீட்டைத் துணியைநீக்கி பாராதபடி ஷை கட்டில் சொருகும்படிசெய்து, நாம் கீழேவைத்திருக்கும் கட்டை எடுப்பதுபோல் கவிழ்ந்திருக்கும் ஒரு சீட்டை மாத்திரம் கவனித்துப்பார்த்துக்கொண்டு சரியாக திருப்பிவைத்து சீட்டுக்கட்டை வெளியிலெடுத்துக் கலைத்து இன்னதென யோஜிப்பதுபோல் அபிநயம் செய்து அவர் பார்த்தசீட்டை சொல்லவும்.

---

## 13. 27 சீட்டில் நினைத்த சீட்டை சொல்லுதல்.

சீட்டுக்கட்டிலிருந்து 27 சீட்டுகளைத் தனியாக எடுத்துக்கலைத்து சபையோரிலொருவரை அழைத்து ஓர் சீட்டெடுத்துப் பார்த்துக்கொள்ளும்படிச்செய்து

கையிலிருக்கும் பாக்கி 26 சீட்டுகளுடன் அதையும் வைத்து கலைத்துக் கொடுத்தபிறகு 3 குப்பல் 3×9=27 ஆக போட்டு அவர் பார்த்தசீட்டு எந்த குப்பலில் இருக்கிறதோ அக்குப்பல் நடுவிலும் மற்ற 2ம் மேலுங் கீழுமாகவைத்து மறுபடியும் முன்போல் பாகித்துப் போட்டு அதையும் அப்படியேசேட்டு சேர்த்துவைத்து மறுபடியும் முன்போலவே பாகித்துப்போட்டு எந்த குப்பலில் இருக்கிறதோ அந்த குப்பலில் 5வது சீட்டை எடுத்துக்கொடுக்க சரியாகயிருக்கும்.

---

## 14. சீட்டுகளைத் தடவிப்பார்த்து சீட்டின் பெயரை சொல்லுதல்.

சீட்டுக்கட்டை சபையோரிடம் கொடுத்து நன்றாய்க் கலைத்துக்கொடுக்கச்சொல்லி வாங்கிக்கொண்டு நாமும் மறுபடி நாலு ஐந்து தடவை கலைத்து அதின் அடிச்சீட்டை தந்திரமாய் பார்த்துக்கொண்டு தனது

பின் பக்கத்திற்கு ஷ சீட்டுக்கட்டை கொண்டுபோய் சீட்டுகளைத் தடவிட்டார்த்து அதன் பெயரை தெரிந்து கொள்வதுபோல் நடித்து நாம் அடியில் பார்த்த சீட்டை கட்டின்மேல் திருப்பிவைத்து அதன் பெய ரைச்சொல்லி சபையோரிடம் காண்பிக்கும்பொழுது கட்டின் அடிச்சீட்டு நமக்கு நன்றாய் தெரியுமாதலால் பார்த்துக்கொண்டு மறுபடியும் பின்பக்கம் கொண்டு போய் அதையும் கட்டின்மேல் திருப்பிவைத்து முன் பக்கம் கொண்டுவந்து பார்த்த சீட்டின் பெயரைச் சொல்லிக்காண்பிக்க மறுபடியும் கட்டின் சீட்டுகள் யாவும் எதிரில் தெரியுமாதலால் பின்பக்கம் கொண்டு போய் ஒவ்வொரு சீட்டாக கட்டின்மேல் திருப்பி வைத்து சீட்டுகளின் பெயர்களைச்சொல்லி சபை யோரை பிரமிக்கச்செய்யலாம். 10 அல்லது 15 சீட்டு கள்வரை சொல்லிவிட்டு நிறுத்துவது நலம். மறுபடி சபையோரிடம் சீட்டுக்கட்டை கொடுக்கும்பொழுது திரும்பியிருக்கும் சீட்டுகளை சரியாகவைத்து கொடுக்க வேண்டும். இவ்வேலை சிலருக்கு தெரிந்திருப்பினும் சாமர்த்தியமாகசெய்து பிரமிக்கச்செய்யலாம்.

குறிப்பு :—இவ்வித ஏற்பாடமைந்த சீட்டுக்கட்டை வைத்துக்கொண்டு அதிசயிப்புதமான இன்னுமனேக வேலைகள் செய்து சகல ஜனங்களையும்பிரமிக்கச் செய்ய லாம். இதன் முழுவிபரத்தையும் இரண்டாம் பாகத் தில் விரிவாக எழுதப்படும். இதேமாதிரி சீட்டுக் கட்டுத் தங்களுக்குத் தேவையானால் இக் கிரந்தகர்த் தாவின் விலாஸத்துக்கு எழுதி கிரயத்துக்கு பெற்றுக் கொள்ளலாம்.

---

## 15. எடுத்த சீட்டை தெரிந்துகொள்ள சுலபமான வழி.

### மற்றொரு விதம்.

பிறர் எடுத்த சீட்டை கண்டுபிடிக்கும் உபாயங் களில் அடியில் கூறப்போகும் வழியானது சுலபமான தும், முக்கியமானது மாகும். அதாவது சீட்டுக் கட் டின் பின்பக்கம் ஒரேவிதமாக 52 டைமன் ஜாக்கிகள், அல்லது நமக்கிஷ்டபிரகாரம் 52சீட்டுகளும் ஒரேமாதிரி

யாகச் சேர்த்த சீட்டுக்கட்டு ஒன்றும், சாதாரண சீட்டுக்கட்டு ஒன்றும் தயார்செய்து வைத்திருக்கவேண்டியது. சபையில் நின்று வேடிக்கை செய்யும் பொழுது சபையோர் சந்தேகப் படாமலிருக்கும் பொருட்டு சாதாரண சீட்டுக்கட்டை முதலில் எடுத்து சபையோரிடம் காண்பிவித்து பிறர் தெரிந்துகொள்ளாவண்ணம் சாதாரண சீட்டுக் கட்டை சாமர்திபமாய் மறைத்து 52 சீட்டும் ஒரேமாதிரியாக சேர்த்து வைத்திருக்கும் கட்டை கையிலெடுத்துக்கொண்டு நன்ருய்க் கலைத்து சபையோரி லொருவறை அழைத்து எதாவது ஓர் சீட்டு அவர்க்கிஷ்டமான இடத்தில் எடுத்துப் பார்த்துக்கொள்ளும்படிச் செய்து அவர் சீட்டைப் பார்க்கும் சமயம் சிற்சில வார்த்தைகள் சமயோஜிதம்போல் பேசிக்கொண்டே கையிலிருக்கும் கட்டைமறைத்து விட்டு சாதாரண சீட்டுக்கட்டை கையிலெடுத்துக் கொண்டு, ஷை கட்டை சபையோரிடம் கொடுத்து அவர் இஷ்டப்பிரகாரம் சீட்டுக்கட்டில் எங்கேயாவது அவர் பார்த்த சீட்டை வைத்துக் கலைத்துக் கொடுக்கச் சொல்லி கையில் வாங்கிக்கொண்டு “மேஸ்

மெரிஸம்" சக்தியால் சொல்வதற்கு யோஜிப்பதுபோல் அபிநயம் செய்து சீட்டின் பெயரைச் சொல்ல எல்லோரும் ஆச்சரியப்படுவார்கள். சீட்டுக்கட்டு மாற்றுவது சாமர்த்தியமாய் சபையோர் தெரிந்துகொள்ளா வண்ணம் மாற்றவேண்டும்.

---

## 16. பிறர் நினைத்த சீட்டை சொல்லுதல்.

நாம் இதுவரையில் பிறர் எடுத்த சீட்டை தெரிந்துகொள்வதற்குக் கூறிவந்துளோம். இப்பொழுது பிறர் மனதில் நினைத்துக்கொண்ட சீட்டை தெரிந்துகொள்ளும் ஆச்சரியமான தொழிலின் உபாயத்தைப்பற்றி அடியில் கூறுவோம்.

சீட்டுக் கட்டிலுள்ள சீட்டுகள் 52-ம் சரியாக எடுத்துவைத்துக்கொண்டு சீட்டுக்கட்டை நன்றாய்க் கலைத்து கட்டை முன்பக்கமாக திருப்பி இடது கையில் வைத்துக்கொண்டு மேல் சீட்டு மேலேயே யிருக்

கும் வண்ணம் ஒன்றின் கீழ் ஒன்றாய் ஒவ்வொரு சீட்டின் ஓரத்தில் போடப்பட்டிருக்கும் நெம்பர் ஜாதி முதலியது தெரியும்படி தொடர்ச்சியாய் மேஜையின் மேல் அல்லது கீழேபிரித்து சபையோரிலொருவரை அழைத்துச் சீட்டுக்கட்டைப் பிரித்துவைத்திருப்பதில் முதல் சீட்டிலிருந்து 1, 2, 3, 4 என்பதாக வரிசைக்கிரமப்படி அவருக்கிஷ்டமான நெம்பர்வரை மனதிற் குள்ளேயே எண்ணிக்கையுடன் நினைத்துக் கொள்ளச் சொல்வதுடன் சீட்டின் பெயரையும் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளும்படி சொல்லவேண்டும். அதன் பிறகு சீட்டுக்கட்டை அப்படியே கலையாமல் எடுத்து பின்பக்கமாக திருப்பி கையில் வைத்துக்கொண்டு நாம் செய்யும் சூக்ஷமத்தை சபையோர் தெரிந்துக்கொள்ளாமலிருக்கும்பொருட்டு ஓர் கைக்குட்டை அல்லது துனியால் சீட்டுக்கட்டை மூடிக்கொண்டு கட்டின் மேலிருந்து 20 சீட்டுகள் எடுத்து கட்டின் அடியில் வைத்து மூடிய துணியை எடுத்துவிட்டு இடதுகையில் கட்டை வைத்துக்கொண்டு சபையோரைப் பார்த்து "நான் சீட்டுக்கட்டைக் கீழே பிரித்ததும் தங்களிஷ்டப்பிரகாரம் இத்

தனுவது சீட்டு இன்ன சீட்டு என்பதாக மனதில் நினைத்துக்கொண்டிருக்கிறீர்கள் அதை சீட்டின் பெயராவது எண்ணிய நெம்பராவது ஒருவருக்கும் தெரியாதிருப்பினும் இப்பொழுது எனது "மனோ சக்தி" யால் தாங்கள் பார்த்த சீட்டை தெரிந்துகொண்டு இச்சீட்டுக் கட்டில் 33-வது சீட்டாக எடுத்து வைத்திருக்கிறேன். அதுவும் எப்படியெனின்; தாங்கள் எத்தனுவது நெம்பர் நினைத்துக்கொண்டீர்களோ அதிலிருந்து 33-வது சீட்டாக வரவழைக்கிறேன் பாருங்கள்! என உரைத்து தாங்கள் எத்தனுவது நெம்பர் நினைத்துக் கொண்டீர்கள்? என்பதாகக்கேட்டு அவர் சொல்லும் நம்பரிலிருந்து துடர்ச்சியாய் எண்ணிக்கொண்டு போக (அவர் நினைத்துக் கொண்ட நெ. 10 என்றால் 11, 12, 13 என்பதாக எண்ணவேண்டும்.) 33-வது சீட்டுவந்ததும் சபையோர் நினைத்துக்கொண்ட சீட்டாகவே யிருக்குமாதலால் எனையோரும் ஆச்சரியப்படுவார்கள். சபையோர் மனதில் நினைத்துக்கொண்ட சீட்டை எடுத்துக் கொடுப்பதால் மிகவும் ஆச்சரியத்தைக் கொடுக்குமென்பது திண்ணம்.

குறிப்பு:—சீட்டுக்கட்டைக் கீழே பிரித்து சபை யோரைப் பார்த்து இத்தனைவது சீட்டு இன்ன சீட்டு என்பதாக மனதிற் நினைத்துக்கொள்ளச் சொல்லிய பிற்பாடு கட்டை கலைக்கக்கூடாது. துணியால் மூடிக் கொண்டு சீட்டுக் கட்டின் மேலிருந்து எவ்வளவு சீட்டு கள் எடுத்து கட்டின் அடியில் வைக்கிறோமோ அவ் வளவு நெம்பர் சீட்டுக்கட்டிலுள்ள மொத்தச் சீட்டுகள் எவ்வளவோ அதில் கழித்து மீதியிருக்கும் தொகையுடன் ஒன்று அதிகம்கூட்டிவரும் நெம்பரில்சபையோர் நினைத் துக்கொண்ட சீட்டை வரவழைப்பதாகச் சொல்லவும்.

உதாரணமாக:—கட்டிலுள்ள சீட்டுகள் 52 சீட் டுக்கட்டின்மேலிருந்து எடுத்துவைத்த சீட்டுகள் 20, 52ல் 20 போக பாக்கி 32. ஒன்று அதிகம் கூட்ட 33. அதாவது 33-வது சீட்டில் வரவழைப்பதாகக்கூறி அவர் நினைத்துக்கொண்ட நம்பரைக்கேட்டு அதிலிருந்து தொடர்ச்சியாய் எண்ணிக்கொண்டுபோக சபையோர் நினைத்த சீட்டு சரியாகயிருக்கும்.

---

## 17. 52 சீட்டுகளையும் பார்க்காமல் சொல்தல்.

இவ்வேலையானது மிகவும் ஆச்சரியத்தையும், பிரமிட்டையும் உண்டாக்கக்கூடிய அற்புதமான தொழிலென்பதை நாம் சொல்லாமலே இதன் தலையங்கத்தைப் பார்த்தமாத்திரத்தில் இதை முழுதும் படித்து இவ்வித்தையின் இரகசியத்தை அவசியம் தெரிந்து கொள்ள வேண்டுமென இதைக்கண்ணுறும் ஒவ்வொரு நண்பர்களுக்கும் அவா உண்டாகுமென்பதற்கு ஐயமில்லை.

சீட்டுக்கட்டிலுள்ள சீட்டுகள் யாவற்றையும் பார்க்காமல் சொல்வதின் சூக்ஷமம் எவ்விதமெனின்; சபையில் நின்றுவித்தை செய்வதற்கு முன்னமேயே அடியில் கூறியபிரகாரம் சீட்டுகளை வரிசைக்கிரமப்படி அடுக்கிவைத்துக்கொள்வதுடன் மனதில் பாடம் செய்தும் வைத்திருக்கவேண்டும்.

| | |
|---|---|
| எட்டு, | மூன்று, |
| ராஜா, | பத்து, |

இரண்டு, ஆறு,
ஏழு, ராணி,
ஐந்து, நாலு,
ஒன்பது, ஜாக்கி,
ஆஸ்,

என்ற முறையே மனதில் பாடம்செய்துகொள்வதுடன், கிளாவர், ஆடுதன், இஸ்பேட், டைமன் என்ற வரிசைக் கிரமப்படி கருப்பு ஒன்றும் சிகப்பு ஒன்றுமாக அடுக்கி வைத்துக்கொள்ளவேண்டும். அதாவது கிளாவர் 8, ஆடுதன் ராஜா, இஸ்பேட் மூன்று, டைமன் பத்து, கிளாவர் இரண்டு, ஆடுதன் ஏழு, இஸ்பேட் ஐந்து, டைமன் ஒன்பது, கிளாவர் ஆறு,...........என்ற முறையே 52 சீட்டுகளையும் அடுக்கிவைத்துக்கொள்ள வேண்டும்.

இவ்வித்தை செய்வதற்கு சீட்டுக்கட்டின் பின்புறம் ஒரேவிதமாக இரண்டு கட்டுகள் வாங்கி ஒரு கட்டை மேற்கூறிய பிரகாரம் அடுக்கிவைத்துவிட்டு மற்றொரு கட்டை சபையோரிடம் கலைப்பதற்கு கொடுப்பதற்காக வைத்துக்கொள்ளவேண்டும்.

சபையில் நின்று வேடிக்கை ஆரம்பம் செய்யும் பொழுது வித்தை செய்வதற்காக ஏற்படுத்தியிருக்கும் மேடையின்கண் போடப்பட்டிருக்கும் மேஜையின் பின்னால் ஓர் நாற்காலி அல்லது ஸ்டூல் ஏதாவதொன்று உயரமாக போட்டு அதன்மேல் வரிசைக்கிரமப்படி அடுக்கிவைத்திருக்கும் சீட்டுக்கட்டை சபையோர் தெரிந்து கொள்ளா வண்ணம் வைத்துவிட்டு, சாதாரண சீட்டுக் கட்டை கையிலெடுத்து நன்றாய்க் கலைப்பதுடன் சபையோருக்கும் எவ்வித சந்தேகமும் ஏற்படாமலிருக்கும் பொருட்டு அவர்களிஷ்டப் பிரகாரம் கலைத்துக்கொடுக்கச்சொல்லி வாங்கிக்கொண்டு 'மேஸ் மேரிஸம்' எனும் "மனோசக்தி" யால் இச்சீட்டுக் கட்டிலுள்ள 52 சீட்டுகளையும் பார்க்காமல் சொல்லி வருகிறேன் பாருங்களெனக்கூறுவதுடன் சமயோஜிதம்போல் சிற்சில வார்த்தைகள் பேசிக்கொண்டே மேஜையின் பின்பக்கத்தில் ஏற்கனவே போடப்பட்டிருக்கும் நாற்காலியின் ஓரத்தில் நின்றுகொண்டு தந்திரமாய் கையிலிருக்கும் சீட்டுக்கட்டை நாற்காலியில் வைத்துவிட்டு வரிசைக்கிரமப் படி அடுக்கி வைத்திருக்கும் கட்டைக் கையிலெடுத்துக்

கொண்டு ஷை கட்டை குட்லுருவிக்கலைக்காமல் கட்டை வெட்டி, வெட்டிக்கலைத்துக்கொண்டே கட்டின் மேல்ச் சீட்டை தந்திரமாய் பார்த்துக்கொண்டு மேஜையின் மேல் ஷை கட்டை வைத்துவிட்டு சபையோரிலொரு வரை அழைத்து நான் சீட்டின் பெயர்களை சொல்லிக் கொண்டுவருகிறேன் ஒவ்வொரு சீட்டாக கட்டின் மேலி ருந்து எடுத்து சபையோருக்கு நன்றாக காண்பிவித்து கீழே போடவும் என்பதாக சபையிலிருந்து அழைத்த வருக்கு உத்திரவளிப்பதுடன் ஷை யாரையே தனது கண்களை ஓர் கைக்குட்டையால் கட்டிவிடும் படிக்கும் ஆக்ஞாபிக்க வேண்டியது. அதன் பிறகு ஏற்கனவே கட்டைக் கலைக்கும்பொழுது கட்டின்மேல் எந்த சீட்டு பார்த்துக்கொண்டோமோ அதிலிருந்து வரிசைக்கிரமப் படி சீட்டுகளைச்சொல்லி ஒவ்வொரு சீட்டாக எடுத்து சபையோருக்கு காட்டி கீழே போடச்சொல்ல வேண் டும். உதாரணமாக:—கட்டின் மேல்சீட்டு டைமன் ராஜா பார்த்திருந்தால் அதற்கு அடுத்த சீட்டு கிளாவர் மூன்று என்றும் அதன்பின் ஆடுதன் 10 என்றும் அதன்

பின் இஸ்பேட் இரண்டு என்றும், அதன்பின் டைமன் ஏழு என்றும் முறையே சொல்லி வரவேண்டும்.

இக்காக்ஷியைக்கண்ணுறும் சபையோர்களனைவரும் "மனோசக்தி" என்றும் மந்திர சக்தியால் சொல்லும் வேலையெனவே பிரமித்து ஆச்சரியப்படுவார்களென்பது திண்ணம்.

குறிப்பு:—சீட்டுகளின் பெயர்களை சொல்லிவரும் போது வேகமாக சொல்லக் கூடாது, யோஜிப்பது போல் அபிநயஞ் செய்யவேண்டும். சீட்டுக் கட்டை மாற்றுவது சபையோர் தெரிந்து கொள்ளா வண்ணம் சாமர்த்தியமாய் மாற்றிக்கொள்ள வேண்டும். ஷை அடுக்கிவைத்திருக்கும் கட்டை குடலுருவி கலைத்தால் சீட்டுகள் கலந்து போய்விடுமாதலால் வெட்டிக்கலைக்க வேண்டியதவசியம்.

---

## 18. பிறர் எடுத்த சீட்டை உடனேசொல்லுதல்

52 சீட்டுகளையும் பார்க்காமல் சொல்வதற்கு வரிசைக் கிரமப்படி அடுக்கிவைத்திருக்கும் சீட்டுக்கட்டின்

உதவியினால் பிறர் எடுத்த சீட்டை உடனே சொல்லக் கூடும். எவ்விதமெனின் :—அடுக்கி வைத்திருக்கும் ஒரு சீட்டுக்கட்டை கையிலெடுத்து விசிறிபோல் பிரித்துக் கொண்டு சபையோரிலொருவரை அழைத்து ஒரு கட்டில் ஏதாவது ஓர் சீட்டெடுத்துப் பார்த்துக் கொள்ளும் படி சொல்லவேண்டும். அவர் எடுத்த சீட்டைப் பார்க்கும் சமயம் அவர் எந்த இடத்தில் சீட்டு எடுத்தாரோ அதன் பக்கத்து சீட்டைத் தந்திரமாய்ப் பார்த்துக் கொண்டு அவர் எடுத்த சீட்டைச் சொல்லலாம்.

உதாரணமாக :—அவர் எடுத்த சீட்டின் மேல் சீட்டு ஆடுதன் 8-ம் பந்து என்றால் அவர் கையிலிருக்கும் சீட்டு இஸ்பேட் ராஜா என்று சொல்லவேண்டும்.

குறிப்பு:—இவ்வேடிக்கை செய்யும்போது கவனிக்கவேண்டியது யாதெனின் சீட்டுக்கட்டை குடலுருவிக்கலைத்தால் சீட்டுகள் கலைந்துபோய்விடுமாதலால் வெட்டிக் கலைக்கவேண்டிய தவசியம். மேற்கூறிய உபாயத்தால் சீட்டை தெரிந்துகொண்டு சமயோஜிதம் போல் வேறுவேலையாக செய்தாலும் செய்யலாம்.

## 19. சீட்டுக்கட்டில் அஷ்டாவ்தானம் செய்தல்.

52 சீட்டுகளையும் பார்க்காமல் சொல்வதற்கு அடுக்கி வைத்திருக்கும் சீட்டுக்கட்டை 8 பாகமாக பிரித்து சபையோரில் 8 பேர்வழிகளிடத்தில் வரிசை யாகக் கொடுத்துவிட்டு ஆரம்பத்திலிருந்து சீட்டுகளின் பெயர்களைச் சொல்லி சபையோருக்கு ஆச்சரியத்தை உண்டுபண்ணலாம். ஆனால் மிகுந்த பழக்கம் வேண் டும்.

---

## 20. அடிச்சீட்டைப் பார்த்து பிறர் எடுத்த சீட்டை தெரிந்து கொள்தல்.

சீட்டுக்கட்டை நன்றாய்க்கலைத்து விசிறிபோல் பிரி த்துக்கொண்டு சபையோரிலொருவரை அழைத்து ஏதா வதொரு சீட்டெடுத்துப் பார்த்துக் கொள்ளும்படி சொல்லி அவர் சீட்டைப் பார்த்துக்கொள்ளும் சமயம்

தந்திரமாய் கட்டின் அடிசீட்டைப் பார்த்துக்கொண்டு பிறகு கட்டின்மேல் அவர் பார்த்த சீட்டை வைக்கும்படிச் சொல்லி சீட்டை வெட்டிக் கலைத்துப் பிரித்துப் பார்க்க நாம் அடியில் பார்த்த சீட்டுக்கு மேற்பக்கத்தில் அவர் பார்த்துவைத்த சீட்டும் கலையாமல் சேர்ந்திருக்குமாதலால் அச்சீட்டை எடுத்துக் கொடுக்க அனைவரும் ஆச்சரியப்படுவார்கள். இவ்வேலைக்கு குடலுருவி கலைக்கக்கூடாது.

---

## 21. கலைக்கும் சாமர்த்தியத்தினால் எடுத்த சீட்டை தெரிந்து கொள்தல்.

சீட்டுக்கட்டை நன்றாய்க் கலைத்து சபையோரில் ஒருவரை ஏதாவது ஓர் சீட்டெடுத்துப் பார்த்துக்கொள்ளும்படி செய்த பிறகு கட்டை நன்றாய்க் கலைத்து இடதுகையில் வைத்துக்கொண்டு ஷை கட்டின்மேல் சபையோர் பார்த்த சீட்டை வைக்கச்சொல்லி, அப்படியே மேல் சீட்டு கலையாமல், அதாவது சபையோர்

பார்த்த சீட்டு மேலேயே இருக்கும்படியாயும், சபை யோர்கள் சீட்டுக்கட்டை நாம் நன்ருய்க் கலைப்பதாக நினைக்கும்படியாயும், சாமர்த்தியமாய்க் கலைத்து ஷை சீட்டை கட்டின் அடியில் வரும்படி செய்து தந்திர மாய் ஷை சீட்டு இன்னதென்று தெரிந்துகொண்ட பிறகு கட்டை சபையோரிடம் கொடுத்து அவர்களையும் நன்ருய்க் கலைத்துக் கொடுக்கச் சொல்லி மனேசக்தி யால் சீட்டின் பெயரைக் கண்டுபிடிப்பதுபோல் பாவனை செய்து சீட்டின் பெயரைச் சொல்ல எனையோரும் ஆச் சரியப் படுவார்கள்.

குறிப்பு :—மேல் சீட்டு கலையாமல் சீட்டுக்கட்டை கலைப்பது எப்படியெனின்; வலது கை ஆள்காட்டி விரலால் கட்டின் மேல்சீட்டை அழுத்திப்பிடித்துக் கலைக்க மேல் சீட்டு ஆள்காட்டிவிரலுடன் ஒட்டி உருவிக்கொண்டேவரும். இரண்டொருதடவை மேல் சீட்டாக வைத்து கலைத்துவிட்டு கட்டின் அடியில் ஷை சீட்டைக் கொண்டுவந்து பார்த்துக்கொண்டபிறகு சாதாரணமாக கலைப்பதோடு சபையோரிடம் கொடுத்தும்

கலைத்துக்கொடுக்கச் சொல்லவும். இவ்வேலை மிகவும் சாமர்த்தியமாய் செய்யவேண்டும். சீட்டு கலைப்பதற்கு மிகுந்த பழக்கம் செய்யவேண்டும்.

---

## 22. பார்த்த சீட்டிற்கு அடையாளம் செய்தல்.

சீட்டுக்கட்டை நன்றாய்க் கலைத்து சபையோரி லொருவரை அழைத்து ஓர் சீட்டெடுத்துப் பார்த்துக் கொள்ளும்படிச்செய்து சீட்டுக்கட்டை விசிறிபோல் பிரித்துக்கொண்டு ஷை சீட்டை சொருகிவிடும்படி சொல்லி அவர் கட்டில் சீட்டை சொருகியவுடன், எற் கனவே வலதுகை சுண்டுவிரலில் கொஞ்சம், கரிப் பொடியை தடவிக்கொண்டிருந்து ஷை சீட்டில்தடவி அடையாளம்செய்துவிட்டு பிற்பாடு நன்றாய்க் கலைத்து கட்டைப்பிரித்துப்பார்த்து ஷை அடையாளமிட்ட சீட்டை எடுத்துக்கொடுக்க அனைவரும் ஆச்சரியப்படு வார்கள்.

குறிப்பு:—சபையில் சீட்டை கொடுக்கும்போது சுரியை துடைத்துக்கொடுக்கவும்.

---

## 23. 21 சீட்டுகளில் நினைத்ததை சொல்லுதல்.

சீட்டுக்கட்டிலிருந்து 21 சீட்டுகள் எடுத்து அதை நன்றாய்க்கலைத்து சபையோரில் ஒருவரை ஓர் சீட்டெடுத்துப் பார்த்துக்கொள்ளும்படிச்செய்து பாக்கி 20 சீட்டுகளுடன் அவர் பார்த்தசீட்டையும் வைத்து கலைத்துக்கொடுக்கச்சொல்லி வாங்கிக்கொண்டு வரிசைக் கிரமப்படி $3 \times 7 = 21$ மூன்று குப்பல்களாகப்போட்டு அவர் பார்த்தசீட்டு எந்தக் குப்பலில் இருக்கிறது என்று கேட்டு அந்தக்குப்பல் நடுவிலும் பாக்கி 2 குப்பல்களும் மேலும்கீழுமாகவைத்து மறுபடியும் முன்போல் பாகித்துப்போட்டு எந்தக்குப்பலில் இருக்கிறது என்று கேட்டு அந்தக்குப்பல் நடுவிலும் மற்ற 2ம் மேலும் கீழுமாகவைத்து மறுபடியும் (அதாவது 3வது தடவை) முன்போல் பாகித்துப்போட்டு எந்தக்குப்பலில் இருக்

கிறது என்றுகேட்டு அந்தக்குப்பலில் 4வது சீட்டை எடுத்துக்கொடுக்க சரியாகயிருக்கும்.

---

## 24. 24 சீட்டுகளில் நினைத்ததைச்சொல்லுதல்.

சீட்டுக்கட்டிலிருந்து ஏதாவது 24 சீட்டுகள் எடுத்து அதை நன்றாய்க்கலைத்து, சபையோரில் ஒருவரை அழைத்து ஏதாவது ஓர் சீட்டு எடுத்துப்பார்த்து ஞாபகம் வைத்துக்கொண்டு மறுபடியும் அதிலேயேவைத்து கலைத்துக்கொடுக்கும்படிச் சொல்லி வாங்கிக்கொண்டு, நாமும் மறுபடி 4, 5, தடவை கலைத்து $4\times6=24$ நான்கு குப்பல்களாகப்போட்டு நீங்கள் பார்த்தசீட்டு எந்தக்குப்பலில் இருக்கிறது என்று கேட்டு அக்குப்பலை 2வது குப்பலாகவைத்து பாக்கி 2 குப்பல்களையும் மேலேவைத்து மறுபடியும் முன்போல்போட்டுக்கேட்டு அக்குப்பலில் அடியிலிருந்து 4வது சீட்டை எடுத்துக்கொடுக்க சரியாய் இருக்கும்.

குறிப்பு:—மேற்கூறியபடி 2வது தடவை பாகித்துப்போட்ட குப்பல்களில் எந்தக்குப்பலில் இருக்கிறது என்று சொல்கிருரோ அதில் அடியிலிருந்து 4வது சீட்டை எடுத்துக்கொடுக்க கண்டிப்பாய்ச் சரியாகவேயிருக்கும், ஒருசமயம், அவர் பார்த்தச்சீட்டு இல்லையென்று ஷை 4வது சீட்டை சொன்ஞல் அதேயிடத்தில் ஷை சீட்டைவைத்துவிட்டு, முன்போல் மறுபடியும் பாகித்துப்போட்டு எந்தக்குப்பலில் இருக்கிறது என்று கேட்டு அடியிலிருந்து 4வது சீட்டை எடுத்துக்கொடுக்க சரியாகயிருக்கும்.

---

## 25. எடுத்த சீட்டைக் கண்டுபிடித்தல்.

(மற்றொருவிதம்).

சீட்டுக்கட்டை நன்ருய்க்கலைத்து சபையோரில் ஒருவரை அழைத்து அவர்களிஷ்டப்படி ஏதாவது ஓர் சீட்டை எடுத்துப்பார்த்துக்கொள்ளும்படிச்செய்து மறுபடியும் நன்ருய்க்கலைத்து இடதுகையில் வைத்துக் கொண்டு கட்டை சரிபாதியாகவெட்டி வலதுகையில்

வைத்துக்கொண்டு இடதுகையில் வைத்திருக்கும் சீட்டின்மேல் அவர்கள் பார்த்தசீட்டை வைக்கச்சொல்லி வலதுகையில் வைத்திருக்கும் சீட்டுகளின் அடிச் சீட்டை தந்திரமாய்ப் பார்த்துக்கொண்டு அவர்கள் வைத்த சீட்டின்மேல்வைத்து 5, 6 தடவை கலேத்து விட்டு அடையாளம் பார்த்துக்கொண்ட சீட்டிற்கு அடியிலிருக்கும் சீட்டை எடுத்துக்கொடுக்க அனே வரும் ஆச்சரியப்படுவார்கள். இவ்வேலேக்கு குட துருவிக் கலேக்கக்கூடாது.

முதல்பாகம் முற்றிற்று.

---

## "வைத்தியானந்த பற்பொடி."

மூன்று வேளைகளில் தந்த சம்மந்தமான சகல ரோகங்களையும் நிவர்த்திசெய்து ஆரோக்கியத்தையும் குளிர்ச்சியையும் தரக்கூடியது.

3 மாதம் உபயோகிக்கக்கூடிய டப்பி 1-க்கு அணு 4.

---

# சீட்டுக்கட்டு தமாஷ்கள்.

## (இரண்டாம்பாகம்)

இம்முதற்பாக புத்தகத்தில் பிறர் எடுத்த சீட்டை தெரிந்துகொள்வதற்குமட்டும் அனேக நூதனமான வழிகளைக் கூறிவந்தோம். இரண்டாம் பாகத்தில், சபையோர் பார்த்துக்கொண்டிருக்கும் போதே திடீரென சீட்டுகள் மாறுதல், (Changing Card) நினைத்த சீட்டுகள் தானாக எழும்புதல் (Rising Card.) நினைத்தசீட்டுகள் சபையோர் குறிப்பிடும் இடத்தில் ஒட்டிகொள்தல், பலபேர் பார்த்த சீட்டை ஒரே சீட்டில் வரவழைத்தல், சீட்டுக் கட்டில் செய்யும் மெஸ்மெரிச ஹிப்னாட்டிச வித்தைகள், அஷ்டாவதான வித்தைகள் கொளுத்தின சீட்டை மெழுகுவர்த்தி, ரொட்டி முத



A

வியதுகளிலிருந்து வரவழைக்கும் வித்தைகள், முத லிய அருமையான அனேக நூதன சீட்டுக்கட்டு தமாஷ்கள், அடங்கி இருக்கின்றன. இம்முதற்பாகம் படித்தவர்கள் கண்டிப்பாய் இரண்டாம்பாகம் படித்துப் பார்க்கவேண்டும். இம்மாதிரி புத்தகம் இதுவரை வெளிவரவில்லை என்பது திண்ணம்.

இன்றே ஆர்டர் செய்யுங்கள் சுவல்ப பிரதிகள்தான் கைவசமிருக்கின்றன.

முந்துங்கள்! புத்தகத்திற்கு முந்துங்கள்!!

ஆங்காங்கு அவசியமான படங்களுடன்கூடிய "சீட்டுக்கட்டு தமாஷ்கள்"

இரண்டாம் பாகம் புத்தகம் ரூ. 1—0—0 } தபால்கூலி
முதல் பாகம் „ „ 2—0—0 } வேறு.

இரண்டு பாகங்களும் ஒரேதடவைகளில் வாங்குபவர்களுக்கு தபால்கூலி உள்பட ரூ. 2—8—0.

மானேஜர்,
"மாயாவி" ஆபீஸ்,
புதுக்கோட்டை, (திருச்சி.)

---

P. N. P. Raja Printing Works, Poo kulam, Trichy.

ஆச்சரியமான

# இரக்ஷாபந்தனம்.



இது பாலர் முதல் விருத்தர் வரை ஆண், பெண் இருதரத்தார்களுக்கும் அவசியம் தேவை.

இதை அணிந்து கொண்டால் சகலவசியம், தனலாபம், நினைத்த காரியசித்தி, புத்திரசந்தானம், தெய்வசித்தி முதலியன உண்டாவதுடன் செய்வினை, பேய், பிசாசு முதலிய சகல தோஷங்களும் நீங்கும்.

இரக்ஷாபந்தனம் 1-க்கு
தபால் கூலி உள்பட விலை ரூ. 2—6—0.

அநேக நற்சாக்ஷி பத்திரங்கள் பெற்றிருக்கிறது. இன்னும் வந்து கொண்டும் இருக்கின்றன.

மானேஜர்,
"மாயாவி" ஆபீஸ்,
புதுக்கோட்டை, (திருச்சி.)